நந்தியும்விடைபெற்றேகினளிர்கடற்கீழ்போய்வீழ்ந்து
சிந்தியசிந்தையானேச்சிவனழைத்தனனென்றோத
வந்தரமிசையின்மேகமதிர்ந்துபோவதுபோல்வேத
முந்துறும்வாய்களார்ப்பமுகந்தொறுங்கண்ணீர்பெய்தான். (கரு0)

தானுளநீளமானயோசனைமுப்பதோடு
மானமார்பகலநான்குயோசனைவடிவத்தோடும்
ஞானமார்நந்திசொன்னநலஞ்செவிபுகுதலோடு
நீணிறக்கடல்விட்டோங்கிநிருதனுநிமிர்ந்துநின்றான். (கருக)

உற்றெறிகடற்கண்மேகமுதித்தெனவெழுந்துசெவ்வி
துற்றிடுமுகமொன்பானுந்தொட்டகட்குழியுங்கையாற்
பெற்றதோர்யாழுங்கொண்டுபெருந்தகைநந்திபின்போய்ப்
புற்றரவணிந்தகோனைப்புனிதன்முன்பணிந்துநின்றான். (கருஉ)

நின்றபோதமலனந்தநிருதனைநோக்கியன்பா
லன்றரிசிரமுந்தொட்டவருவிழிச்சுடருமுன்னுட்
குன்றுறுவாளுமீளக்கொடுத்துக்கோடீசலிங்க
மொன்றுமங்களித்துச்செல்கென்றேவத்தாழ்ந்தொல்லைமீண்டான். ()

மீண்டவன்போகும்போதுவிடுசிகைத்தலையுநூலும்
பூண்டபூந்தழையுமேந்திப்பூசிக்கவருவான்போல
நீண்டமான்மறையோனாகிநிருதன்முன்வரலும்வெற்பைக்
கீண்டவனவனையந்தக்கிரிவருநீயாரென்றான். (கருச)

ஆரெனநெடிதுகேட்டவிராவணன்வதனநோக்கிப்
பாரொனும்பரப்பிற்றெய்வப்பதியெங்கும்பணிந்திப்போது
காரணவரக்கர்வாழக்கைக்கடலகவிலங்கைநின்றே
யாரணமுதல்வற்போற்றியரிச்சிப்பான்வந்தேனென்றான். (கருரு)

வந்தனனெனலுமங்கவ்வளம்பதியியல்பேதென்ன
வந்தலூராக்கர்கோமானன்னையாமொருத்திமேனாட்
சுந்தரப்புதல்வன்கோணமலையின்கீழ்த்தணிந்தானென்ன
நைந்துநொந்துயிரும்விட்டாளென்பரன்னுடனொன்றான். (கருசு)

என்னுமம்மொழிநாராசமிருபதுசெவியும்பாயத்
தன்னுயிர்பதைத்துநெஞ்சந்தளர்ந்துவீழ்ந்தெழுந்துவாய்விட்
டன்னையோவன்னையோவிவ்விலிங்கமார்க்களிப்பனையோ
நின்னையுமிழந்தென்றுவிநிற்குமோநிலத்திலென்றான். (கருஎ)

என்றவனிரங்குங்காலையிலிங்கநின்கரத்திலேந்தி
நின்றிரங்குவதொண்ணுதென்றிலிங்கந்தனெடுங்கைதாங்கி

மன்றலங்கயிலைவெற்பில்வாமபாணிருதிதிக்கில்
வென்றியஞ்சயம்புவாகவிரிகடல்வண்ணன்வைத்தான். (கருஅ)

வைத்தநீர்க்குமிழிமாய்ந்தால்நீரதாமண்ணேடேமண்
ணுைத்திடுமுடலுக்கென்கொலிரங்குவையோர்பால்வாடை
மெய்த்தளிர்ச்சருகுகூட்டவதனைவெஞ்சூறையோர்பாற்
றத்துறப்பிரிக்குமாவிசரிப்புமன்னதுவேயன்றே. (கருகூ)

ஓவெனவரற்றின்மாண்டார்க்குறுவதோருறுதியாமோ
தாவறுமுதகப்பேறுந்தானமுங்கடனும்யாவுந்
தேவர்தந்தேவன்கோணைத்திருமலையதனிற்செய்தான்
மேவுமுன்னன்னையந்தவும்பர்தம்வீட்டினும்பர். (கசுo)

உம்பரிக்கயிலைதன்னிலொருபொழுதுமையாளீசன்
வம்பவிழ்சடையைக்கையால்வகிர்தலுங்கங்கையஞ்சிக்
* கம்பிதங்கொளலுநம்பன்கண்டுகைநகத்தால்வாங்கிச்
சம்புவின்றீவின்றென்பாற்சாகரத்தெற்றிவைத்தான். (கசுக)

எற்றியபோதுகங்கையிலங்கையுத்தரபால்வேலை
சுற்றியதிரைகள்போர்ப்பத்துலங்கலுமதற்குமேலாய்
முற்றிரிகூடநாட்டிமுறைமையதனுப்பட்செய்து
நற்றியபெருமான்றீர்த்தநடுவுறமுளைத்துநின்றான். (கசுஉ)

நின்றவக்கடவுட்குன்றைநினைந்தொருவலஞ்செய்வார்பொற்
குன்றினுஞ்சென்றுநூறுகொடுமுடிசூழ்வதொக்கும்
பொன்றலில்வடிவுகாணப்புறந்திடுமச்சமென்ன
வன்றரன்கயிலைக்கொப்பவமைத்ததிக்கயிலைகண்டாய். (கசுங)

ஆய்ந்தசீரிடையாலோடியலங்குகாவிரியினீரும்
பாய்ந்தபிங்கலையாலோடிப்பரந்தமாவிலியினீருந்
தோய்ந்தபேராழியின்கட்சுழிமுனைவடிவாய்நேர்புக்
கேய்ந்தவான்கங்கைதன்னேடிசைந்ததிக்கயிலைகண்டாய். (கசுச)

கண்டவிக்கயிலைச்சாரற்கலந்தநாற்றிசைநாற்காத
மண்டனிற்சனித்தபேதமருவுபல்லுயிர்களெல்லாம்
விண்டனிக்கடவுளாமிவ்வெற்பினிற்கங்கைநீர்தோய்ந்
துண்டவர்சாருபத்தினுதிப்பஃதுதிண்ணந்திண்ணம் (கசுரு)

திண்ணலந்தொலையாதின்னுஞ்செப்புவதிருதகேண்மோ
வுண்ணலங்கூரப்பூசையுமாபதிக்கீவோனுந்

---

* கம்பிதம் - நடுக்கம்.

தண்ணலங்கலுமூந்தெண்ணீர் தருகுவரோனுமன்று
ரண்ணலம்பெருமான்மெய்யோடடைவதற்கையமில்லை. (கசுசு)

இல்லையென்றில்லந்தோறுமிரந்திடுபொருள்களேனு
நல்லவைமுக்கூறுக்கிநாதனுக்கொருகூறீவார்
தொல்லையில்வினையுந்தீர்ந்துசோதிபேருலகிற்சேர்வ
ரல்லதுமுத்தியென்னுமரியவீடடையமாட்டார். (கசுஎ)

மாட்சியங்கயிலையாமிம்மலைக்குநாற்றிசைநாற்காத
மாட்சியினிலைபூநன்காயருங்கனிகந்தமாதி
காட்சியிறுன்கின்றுன்றிக்கடவுளுக்களித்துணுதார்
சேட்செறிகடற்கணுமையாயவர்செனித்துவீழ்வார். (கசுஅ)

வீழ்சடைக்கடவுட்கோணைவெற்பினுச்சிட்டம்வீழ்த்தல்
வாழ்தனிமடவாரோடுவசித்தல்கம்பளத்தில்வைகல்
கீழ்விடுமலசலாதிகிரியினில்விடுந்தல்செய்வார்க்
கேழ்பெருநரகிலப்பாலிருணரகவர்வீடென்றுன். (கசுகூ)

ஆனவிக்கயிலைதன்னிலரனபிடேகநேரம்
போனகமருந்துநேரம்பூசனைமுடிந்தநேரந்
தேனவிழ்சடையார்முன்போய்த்தெரிசனையிடமுமாகா
கானகிலத்திலூன்றிக்கடுநடைவலமுமாகா. (கஎ0)

காவணம்பொய்கைபைம்பூங்காவனமரற்குச்செய்வார்
கோவிலுமதிலுஞ்செம்பொற்கோபுரமுதலசெய்வார்
மேவுமெல்லாடைசந்தம்வெண்மணிப்பூணுமீவார்
மூவுலகிறைஞ்சுந்தேவர்முடியின்மேலடியும்வைப்பார். (கஎக)

வைக்குமிக்கயிலைதன்னின்மாதவம்புரிந்துநோற்றன்
மிக்கமந்திரங்களுன்னல்வீய்ந்தவருயிர்க்குப்பேறு
யுய்க்குநற்பலியுண்டாக்கலுறுபசிக்குணவுபெய்தல்
புக்கொருதானநல்கலதன்பலன்புகலொணுதால். (கஎஉ)

ஆதலாலரன்முக்கோணமெளியதன்றரக்கர்கோவே
பூதலந்தன்னிலிந்தத்தானமேபோலவுண்டோ
காதலாலின்றுன்னன்னைகதிபெறப்பலிகன்மாதி
தீதிலாதியற்றிலிங்கோர்தீர்த்தமுண்டாக்குகென்றுன். (கஎந)

என்னலும்வருணதிக்கிலிராவணன்கதைகொண்டெற்றக்
கன்னியம்புனிதகங்கையுதித்ததுகயிலைச்சார
லன்னதுநோக்குமாலாமருமறையவனுமின்றுன்
மன்னியவன்னைசெய்தமாதவமீதுகண்டாய். (கஎச)

ஆயிரம்வருடங்காசியரும்பெருங்கங்கைதோயுஞ்
சேயிருபலனுமிந்தத்தென்கயிலாயச்சாரன்
மேயவிண்ணிலவிவெள்ளம்விரிந்தெனவிரிந்தகங்கை
நேயமோடினிதுதோயும்பலனுமோர்கிறைகண்டாயே. (௧௭௫)

வேறு.

கண்டகின்கதையினுலுதித்தகங்கையைத்
தண்டலிலாதபாதாளகங்கையென்
றண்டரும்புகழுகவகிலம்வாழ்த்துக
மண்டுமிப்பொருட்டினுன்னன்னவாழ்கவே. (௧௭௬)

வேரியகங்கையின்கரையின்மீதுநீ
பரரியபலிகன்மமாதிபண்ணெனக்
கூரியகுசையவன்கைக்கொடுத்துமீண்
டாரியன்வாங்கிகின்றமைப்பதாயினன். (௧௭௭)

ஆயிடைப்பிண்டமொன்றுக்கிவெந்துயர்த்
தீயிடையிராவணன்செங்கையீந்துகின்
றயடையக்கதிசானுவூன்றியுன்
வாயிடைத்துதித்திவண்வைத்தியாலென்றான். (௧௭௮)

ஆலமர்கடவுளைத்துதித்தரக்கன்மண
மேலமர்படமுழந்தாள்விளங்கவைத்
தேலமாகதிபுகவெனதுதாயெனப்
பாலமர்பிண்டமும்பரிந்துநாட்டினன். (௧௭௯)

நாட்டியபிண்டத்தைநாரணன்கர
நீட்டியகுசையினனெகிழ்த்திரண்டுசெய்
தீட்டியவலதுபங்கிடதுபங்குறக்
கூட்டினன்சிவத்துதிக்கொள்கைகொண்டரோ. (௧௮௦)

கொண்டதுபிதிர்ப்பலியினிமுக்கோணமீ
தண்டர்நாயகற்பணிந்தாகச்சேவடி
முண்டகந்தொழுதுகின்னன்னைமுத்தியே
கண்டிடவேண்டுகீகடிதுவாவென்றான். (௧௮௧)

வாவெனகிருதனுமெழுந்துமாலுடன்
* சேவினன்கயிலையிற்சென்றுமுன்பணிந்
தோவியகருமைபங்கவுன்பத
மேவவென்னன்னைக்குவேண்டினேனென்றான். (௧௮௨)

* சேவினன் - சிவன்.

என்றலுஞ்சிவபதமின்றுன்னன்னைக்கு
நின்றிடக்கொடுத்தன னிருதசெல்கெனக்
குன்றவில்லுடையவன் † கூறப்போற்றிமுன்
சென்றமாலுடனவன்சிகரிக்கேழ்வந்தான். (க௮௩)

வந்தனைமறைகுணுக்கியற்றிமற்றினிச்
சிந்தனையென்னெனத்தானஞ்செய்கெனச்
சுந்தரப்பொன்முகில்சொரிவபோல்வரு
மந்தணரியாவர்க்குமளிக்கின்றனரோ. (க௮௪)

ஆனவக்காலையிலரனும்வேதனுஞ்
சேனையோடையிருகோடிதேவரு
ஞானமாமறையவராகிநண்ணினர்
தானமீந்திராவணன்றமுந்துபோற்றினன். (க௮௫)

போற்றரன்பிறகியாம்பொற்பிலிங்கமொன்
றேற்றநால்வேதன்பூதேசலிங்கமொன்
றாற்றமாய்கேசவனுருத்திரேசமாய்ச்
சாற்றுபேரிலிங்கமொன்றவன்கைதந்தனன். (க௮௬)

தந்தமூன்றிலிங்கமுந்தருமுக்கோணமீ
தந்தமோடணைக்கிலுன்னன்னைமுத்தியா
மந்தரப்புயவெனமறைந்துபோயின
னெந்தமாயங்கொலென்றிறைஞ்சியேத்தினன். (க௮௭)

ஏத்தியுந்திருமறைதேடற்கெய்திடாப்
பூத்திகழ்திருவடிப்புலையனென்னையுங்
காத்திடநடந்ததோகடவுளேயென
வாய்த்திடபத்துவாய்தோறும்வாழ்த்தினன். (க௮௮).

வாழ்தருமக்கினிவாயுவிந்திரன்
சூழ்தருதிசைதொறுங்கயிலைச்சுற்றினுந்
தாழ்சடைப்பிறகிபூதேசன்றானணி
யேழ்புகழுருத்திரவிலிங்கந்தாபித்தான். (க௮௯)

## வேறு.

தானிறைஞ்சியதன்மையால்
ஞானநம்பனைநண்ணினன்
கானயாழொடுகல்வியா
லூனமில்லிசையோதினன். (க௯0)

---

† கூறவாங்கிமுன் என்பதூஉம். பாடம்.

ஓதியோதியுணர்ந்துணர்ந்
தாதிசோதியநாதியின்
றேதிலாவிடையெற்கென்
வேதராவணன்மீண்டனன். (௧௧௧)

மீண்டராக்கதர்வேந்தன்மாப்
பூண்டதேர்மிசைப்புக்குநீள்
காண்டருங்கடமுங்கட்ந்
தீண்டிலங்கையுளெய்தினன். (௧௧௨)

எய்தரக்கரெதிர்புகுந்
தையனுற்றனனென்னக்
கைகுவித்திருகாரெழா
மெய்யுவப்பொடுமேவினன். (௧௧௩)

மேவுமிக்கதைமெய்ந்நல
மாவதொக்கவறைந்தனந்
தேவனுற்றதிருப்பதிப்
பாவகத்தியல்பன்னுவாம். (௧௧௪)

பன்னுமீசர்பதிக்கதை
மன்னுநூல்வழியேமனத்
துன்னுவார்சிவலோகமீ
தன்னவானவராகுவார். (௧௧௫)

தரிசனமுத்திச்சருக்கம் முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௫௧௬.

---

## திருநகரச்சருக்கம்.

வாருலவுமுகிழ்முலையுமுத்தரியமணிப்பட்டுமலர்க்கண்ணுக்குங்
காருலவுசுரிகுழலுமொருபாகந்திருமேனிகலந்துதோன்றச்
சீருலவுநதியரவுமதிமுடிமேலொருபாகஞ்சிறக்கத்தோற்று
நீருலவுகயிலைமலைப்பெருமானைமறவாதென்னினைவுநெஞ்சும். (௧)

நெஞ்சகத்தில் வஞ்சமிலாத் தசரதன்பாற் றிருமாய னெடுவெண்
பவ்வத், தஞ்சனக்குன் றெனச்சிறந்து கோசலைதன் வயிற்றுதித்தங்
கயோத்தி நாட்டிற், குஞ்சரத்தின் விளையாடிச் சானகியை மணம்

புரிந்து கூனி செய்த, வஞ்சகத்திற் கைகேசி மதிமுறையால் விதி முறையே வனத்தி லேகி. (உ)

இன்னையெனு மொழிவனிதைச் சானகியு மிலக்குமனுங் கிளர்பூஞ் செங்காற், பின்னையெனு மிளங்காளை யிராமனுமாய்த் தனிவனத்தே பிறங்கு நாளிற், கள்ளவிழிச் சூர்ப்பணகி யிலக்குமனை வலிந்துறுமக் காமந் தன்னாற், றுள்ளிவிழ மூக்கறிந்த காரணத்தை வேறொன்றாய்ச் சொல்லி நின்றாள். (௩)

நின்றடமெய்ப் புயத்தழகுக் கிணங்குமிரு தலைத்தொருத்தி நிமிர்பூங் காவிற், குன்றனையா ருடன்புகுது மலையனைக் காமென்ற குறிப்பினாலே, கன்றியெனைச் செய்தகுறை யீதெனவே நின்றுரைத்த கடும்பொய் யந்த, வென்றிதரு மிராவணனைத் தின்றுமிழ வொருகூற் றம் விடுத்து மீண்டாள். (ச)

மீளாதவிரகமதிபரவுதலாலிராவணனும்விளைவினேகி
மாளாதுபொய்ம்மானுய்வனத்திடையேமானுலனைவரவிட்டந்த
நாளாதிதனிற்சென்றுசீதைதனைக்கொணர்ந்துசிறைநண்ணிவைத்த[ம்
தாளாண்மைதனிலிழந்தானிராகவன்கையம்பொன்றாற்றலைகள்பத்து

* பத்தனமுமெத்திசையுமிலங்கைநகராசனமும்பரிதிசூழ்ந்த
மூத்தலமுமரசுரிமைவிபூஷணற்குமால்கொடுத்தமுறைமையாலிவ்
வித்தகனைமதியழிக்கவிராவணன்றன்பிரமகத்திமேவமாழ்கிச் [ன்.
சுத்தமணித்தென்கயிலைப்பெருமானையிராமனுடன்றொழுதான்கண்டா

கண்டகைய விராவணனை முன்விரலாற் பொருதாளுங் கருத்து மற்றூப், புண்டரிக மலர்த்தாளு மொருபாக மமர்ந்தாளும் புனிதத் தாளுந், துண்டமதி தரித்தாளுங் கோடீர மிருந்தாளுந் துலங்கித் தோன்றக், கொண்டல்விடு மதிபோல வுளமதியுந் தெளிந்துவிழி குளிர்ந்து நின்றான். (எ)

நின்றுகர சரணங்கள் கம்பித்து மயிர்பொடித்து நினைவுண் டாகித், துன்றுமதி யொளிகண்ட காந்தமென விழித்துணைநீர் துளிக்க நோக்கிச், சென்றபகை நிருதன்பாற் கறுத்தமலர்ச் சீர்பாதஞ் சிறந்து தோன்ற, வின்றடியேன் பெற்றபய னிமையோரும் பெற்றனரோ வென்றான் போற்றி. (அ)

போற்றிதிரிபுரதகனகலாந்தகாமதததகனபுனிதாபோற்றி
போற்றிகரகாபாலதானவசங்காரகபுனிதாபோற்றி

---

* பத்தனம் - பட்டணம்.

போற்றியுரகாபரணவரியதளகயிலைமலைப்புனிதாபோற்றி
போற்றிசயசயபோற்றிதிரிசூலதரபோற்றிபோற்றியென்முன். (சு)

என்றென்று துதித்திறைஞ்சி * விபூஷணனவ் விராமனெனு மிய ற்பேருள்ள, குன்றென்று மலர்ந்தவிரு கோகனகம் போற்றியிதழ்க் குமுதம் பேணி, நின்றிங்கோ ராலயமிங் கியற்றுதுநம் வினைதீர்த்த நிம லற் கைய, நன்றென்றுன் னருள்புரிந்தா லதுபோது மென்றவனு நல்ல தென்றான். (கo)

நல்லமதி வைகாசி நற்குருமான் றலைதிங்க ணலத்த வோரை, சொ ல்லியமுற் பக்கமுறும் பஞ்சமியி னுட்கொண்டு தொகுத்துக் கோயில், வல்லவசிட் டனைத்தொழுது தெய்வநா யகன்றனது வடிவந் தீட்டி, யல்லிமலர்த் தாள்போற்ற வேண்டுமென வவன்செய்வா னன்பு கொ ண்டான். (கக)

கொண்டலுறு மின்போல விராவணன்றன் காட்சியினுற் குலவு மேனி, யண்டமெலாம் படத்தெழுதுந் திருவுருவை வசிட்டமுனி யழ கு கூரத், தண்டவளச் சித்திரவோ டலம்புரியா விபூஷணனுந் தாழ்ந் துள் ளன்பாற், கண்டருளிக் கோயிலின்கண் ணமைவித்தான் ஞான விழி கலுழு மார்பன். (கஉ)

பன்னகத்திற் றிருமானின் னடிபோற்றுந் தென்கயிலைப் பரம னீசர், சன்னிதிக்குட் டிருவுருவில் யோகினியைச் சூலினியைத் தாபித் தோங்கும், பொன்னதிக்குன் றெனுமச்ச கேச்சுரத்தை வலம்வந்து போற்றி செய்து, பின்னகத்தி னிராமனுடன் விபூஷணனும் விடைகொ ண்டான் பெற்றி யுள்ளான். (கங)

உள்ளமுடன் விழிகுளிர்ந்தார் சந்திரசூ ரியர்முனிவ ருரக ராவோர், தெள்ளியமலர் கொழித்திறைஞ்சி மண்ணுலகந் தனில்விண்ணோர் தெரி சித் துற்றார், கள்ளமுடன் கொலைகளவு கட்காமங் குருநிந்தை கைவிட் டேனோர், வள்ளலையு மடிபோற்றித் தள்ளரிய துயர்மாற்றி வணங்கி வாழ்ந்தார். (கச)

வானவர்கடொழுங்கோணையண்ணலையுந்தேவியையுமகிழ்ந்துமுன்னுட்
டேனனையமொழிக்கங்குற்கரிபுதல்வனன்பினெடுசெய்யசாம
கானமதனுற்றுதிக்கும்படிகாத்திற்றரித்திடுமக் † கலத்தைக்கண்டே
யானசுசங்கீதனெனுங்கந்தருவனதைக்கவர்தற்காசையுற்றான். (கரு)

---

* "விபூஷணனும் விபூஷணனவ் விராமனென்னும்" என்பது உம் பாடம்.

† கலம் - யாழ்.

உற்றதொருசமயம்பார்த்துற்றிருந்தவனிராமனுயர்வெங்கோலா
லிற்றபோழ்தினிற்கவர்துமானுடைவடிவாகியிணையில்*கீரிப்
பொற்றையெய்திக்கங்காசங்கமப்புணரிநதியாடிப்பொருவிலாது
பற்றொடரன்றனையேத்திவீணுகானந்தன்னைப்பண்ணினுனல். (௧௬)

பண்ணுதலுஞ் சிவபிரான் மகிழ்ந்துவெளிப் பட்டுசுசங் கீத னை
ப்பார்த், துண்ணெகிழ்ந்து நீவீணு கானுய்நின் றிசைத்தமையா லோ
ங்கு மிங்ஙன், மன்னவர்கள் புகழ்வீணு பணமெனும் பெயராக மற்றி
ப் பாங்க, ரெண்ணில்பத லமுளவிக் காட்டைவெட்டி நகராக்கென்
றியம்பிப் போனுன். (௧௭)

போனவரன்மொழிப்படியச்சுசங்கீதன்காட்டைவெட்டிப்புரமதாக்கித்
தானழிந்தவாலயங்கடனையுமெழில்பெறப்புதுக்கிச்சனங்கடம்மை
யானகுடியாயிருத்திநகுலேசரடிபரவியருள்பெற்றேகி
மானிலமெலாம்புகழத்தனதுலகந்தனிலடைந்துவாழ்ந்தானன்றே. ()

வாழ்வுதரு தென்கயிலைப் பெருமான்பொற் றிருக்கோயின் மவுலி
பேணி, யேழுமுகி லுங்கனக மழையுமலர் மழையுமெழு தியற்றி
நின்ற, பாழிவளை முழக்கொலியு மிமையோர்கள் பரவொலியும் பயி
ன்று வாழ்த்தச், சூழுதிரைக் கரத்திற்செ மூந்தாளம் பொழிந்தோ
லச் சுருதி செய்த. (௧௯)

சுருதிசெயுமந்நாளிலொருநாளோராயிரம்பொற்சோதிமாருக்
குருதிபொழிமாணிக்கக்கண்ணுடிகருமையுட்கொள்வபோலப்
பரிதிகுடபாற்கடலுட்புகுந்துகுணபாலுதயம்புரிந்ததோற்றங்
கருதின்முழுமாணிக்கக்கண்ணுடியைவிடுத்தகாட்சிபோலும். (௨0)

காட்சிதருந் திரேதவுகஞ் சென்றுதுவா பரயுகமுங் கலந்த வந்
நாட், சேட்கடல்சூழ் புவியனைத்துந் தொழுங்கயிலைப் பெருமான்
பொற் றிகழ்பூங் கஞ்சத், தாட்கருதும் வானவர்கண் மானவர்போல்
வந்திறைஞ்சித் தவஞ்செய் தேகு, நாட்கருதும் வடமொழியின் புரா
ணநடை யிவ்வளவு நடத்தி னேமால். (௨௧)

நடமருவுதிருப்பாதர்திருப்பாதவருட்கயிலைநாதர்தோற்றந்
தொடைமருவுமெய்ஞ்ஞானச்சுந்தரன்சொற்செந்தமிழாஞ்சுருதி தன்
விடமருவுதில்லைச்சிற்றம்பலமேமுதலெடுத்தவெத்தானத்துங் [னி
கடமருவுமமுதமெனக்காணலாமென்பதனுட்காண்மின்காண்மின். ()

---

* கீரிப்பொற்றை - கீரிமலை. இது யாழ்ப்பாணத்தின் வடபாலி லேயுள்ள ஓர் சிவஸ்தலம்.

காண்மின்க டென்கயிலைப் * பெருமான்றன் றிருமேனி கருது மின்கள், பேண்மின்கள் சந்நிதியிற் புகுமின்க டொழுமின்கள் பேணு மின்கள், கேண்மின்கள் கயிலாச புராணமெனுஞ் சிவகதையைக் கிளைக ளோடும், வாண்மின்க ளுய்மின்க ளஞ்செழுத்தை மறவாது வாழ்த்து மின்கள். (உ௩)

களபமதக்களுழிவரையுரிசெய்தருள்கயிலாயர்கமலபாதம்
புளகமுறமனதினினைப்பவர்நயனவுதகதுளிபொழிவபோல
விளருகடல்பரவுதிரைவிடுவதிலையெறிதுளியோடேறுசங்க
வளையுதவுதரளநிரைசிதறிநிரைதரும்வளமைமலையினுள்ள. (உ௪)

உள்ளறிவு பொடிபடுத்தும் திரிகையெனத் திரியுமதி யுளத்தி னோடும், பள்ளமுறப் பாய்புனல்போற் சஞ்சிதத்தின் வழியொழுகும் படிவந் தீட்டிக், கள்ளவினை தீர்த்துமுத்திக் கதவெவர்க்குந் திறக்குந் தாள் கங்கை வேணிப், பிள்ளைமதி முடித்ததிருக் கயிலையரன் றுள்க ளெனப் பேச லாமே. (உ௫)

மேதினியின்மச்சேந்தியத்துண்மாசூதமுனிவிதித்தவிந்த
வாதிபுராணக்கதையுமன்றியும்பின்னடந்தகதையனேகமுண்டா
னீதியினக்கதைகருதித்தென்கயிலைத்திருப்பதியினிலைமையெல்லா
மோதுவன்செந்தமிழ்நூற்றொடைமுறையானடைமுரசே ருலகமீதே.

தேவரினம்பரவுசிவலிங்கமதுபூசிப்பத்தினமும்வெவ்வே
றுவலிறுற்றுபித்தங்காசமனங்கொண்டதற்பினமுதுசெய்வா
னுவலவன்பெருந்தீவிற்கங்கைநதிக்கரையிருந்துஞாலங்காக்கும்
காவலவன்பரிதிகுலத்தொருதலைவன்மனுநீதிகண்டசோழன். (உ௭)

சோணுடுமுதலியதென்மதுரைவடமதுரையெனச்சொல்லுநாட்டிற்
சாணுடும்பிறர்க்கமையானிலமடந்தைதனைவரைந்ததகுதியாலு
மாணுகுந்திறத்தாலுமபயனெனும்பெயராலுமையனென்றும்
கோணுதகருணையினுலன்னையென்றும்பல்லுயிர்க்குங்கூறலாமே. (உ௮)

கூறுநவகண்டத்துச்சிவதானமனேகம்பொற்கோயிலாக்கிப்
பேறுதரமுடிதரித்தவாராமதேவனெனும்பெரும்போர்வேந்தன்
மாறில்புராணங்கேட்குமொருநாளிற்புரோகிதன்மெய் வருத்தமாகி
வீறபயனவைக்குத்தான்வாராதுமகனைவரவிடுத்தான்மேலோன். ()

வேறு.

மேலமச்சேந்தியபுராணக்கதையைமேலேட்டி
னூலமைத்தங்கடையாளநுவற்சிசெய்துபடியாமல்

* மானைத்திருமேனி என்பதூஉம் பாடம்.

ஞாலமுற்றுஞ்சிவதானக்கதைதாதைநவின்றதற்குட்
கோலமுற்றகுறையென்றுகுமாரனதுபடித்தானே. (௩0)

படித்தபொழுதிருசெவியும்பாட்டுதவுஞ்சுவையமுதங்
குடிக்குமிருநாவாகிக்குடிகொண்டதெனக்கேட்டு
முடித்தலைநேர்கம்பித்துமுகமலர்ந்துமயிர்ப்புறங்கள்
பொடித்துளமுங்கனிந்துருகிப்புளகமெறிந்துரைசெய்வான். (௩க)

செய்தவத்தின்வடகயிலைத்தன்னினுமித்தென்கயிலை
யையனுக்குப்பதியானவருங்காதைசொல்லாமற்
பொய்தனைத்தான்பொருளாக்கும்புரோகிதம்பானீமகவாய்க்
கைதவத்தாலிப்பிபெறுங்கதிர்த்தரளம்போல்வாயே. (௩உ)

வாயிருந்துசதுமறைநூல்வளங்குலவுஞ்சிவனியும்
பேயிருந்தகாட்டிருந்துபெருந்துயரந்தீர்த்தருளும்
வேயிருந்தமணியரசர்விடுகிரணமுடியிருக்கு
மாயிருந்ததவன்பானீயவதரித்தாயரனருளால். (௩௩)

அரவணிந்ததென்கயிலையமரேசன்கதைநீயுங்
கரவணிந்துமொழியாமற்கட்டுரைசெய்யெமக்கென்று
பரவணியாயுயிர்க்குத்தம்பண்டிதநீயெனவனைத்துந்
திரவணையுமிட்டிருத்திச்செவிதாழ்த்தான்மனுவேந்தன். (௩௪)

வேந்தனுக்குமனங்குளிர்ந்துவியப்புவரவேதியன்மச்
சேந்தியமாம்புராணமதுதெரிந்துரைப்பத்திறல்வேந்தன்
காந்தமுங்கூருசியும்போற்கருத்துற்றனவன்செவிக்கிப்
போந்தவமுதிதுவல்லாற்புறத்தமுதம்பொருந்தாதே. (௩௫)

ஆதபனைக்கண்டவிருளதுபோலவஞ்ஞானஞ்
சேதமுறுமனத்தரசன்றென்கயிலைப்பெருமான்மேற்
காதலினல்மந்திரியைக்கருத்துருகியழைத்தருளி
யேதமிலாத்திரிகோணமிறைஞ்சுதும்போயினிதென்றான். (௩௬)

என்றதிருமொழிகேட்டமந்திரியுமிதுமிகவு
நன்றென்றுமனுவேந்தனுடுமரசும்படையுந்
துன்றுபுதல்வருக்களித்துத்தொகுதிபலவுந்திருத்தி
யன்றுமரக்கலம்புகுவானலைகடனீர்க்கரைவந்தான். (௩எ)

வந்தரசன்மந்திரியைவருகெனவுமவனும்போ
யந்தவரன்றிரிகோணத்தாலயத்திற்கனேகசிலை
சுந்தரவாரிக்கரையிற்றெருகுத்துமரக்கலத்தேற்றிச்
சிந்துவின்பாற்போந்துதன்பின்செல்வாரைநிறுவித்தான். (௩அ)

நிறுத்துமமைச்சனுந்தானுநெடியமரக்கலத்தேறிப்
புறத்துமகத்துஞ்சேனைப்பரிசனங்கள்புடைசூழல்
செறித்தகரையும்மனமுந் * திமிலிடைப்பூங்காவனத்துட்
குறித்தமலன்பதநோக்கிக்குவித்தகரத்தினிதிருந்தான். (௩௯)

திருந்துவடகயிலையின்முன்சேடன்மணிப்படம்விரித்துப்
பொருந்தியபின்னுசைபின்னும்பூண்டலைநீர்ப்புறம்வழியாய்
விரிந்தகதிர்த்தென்கயிலைமிசைநோக்கிவருவதென
வருந்தருணப்பாய்விரித்தங்கலங்குகலம்பலவிடுத்தார். (௪0)

விடுத்தவழுபதமுடைத்தாய்மென்கமலமீதோடி
யெடுத்தவிசைக்காமரங்களிசைத்துப்பாய்தலைக்கொளலா
னெடுத்தமுடித்தென்கயிலைநிமலர்பதமலர்தேடித்
தொடுத்தெழுந்தவளியினம்போற்றொடருமரக்கலங்களெல்லாம். ()

கலனோடத்திரையோடுங்கடலோட்டங்களைகண்டு
நிலனோடுந்திசையோடுநிலவெறிக்குங்குடைவேந்தன்
புலனோடுவிழிமலர்ந்து † பூதேசன்றென்கயிலைத்
தலனோடுமனந்தொடரத்தனதுகரங்கூப்பிநின்றான். (௪௨)

நின்றிருந்தகலன்விடுத்துநெடியகரைப்புறத்திறங்கிக்
குன்றிருந்தபுயம்புளகித்தெதிரிறைஞ்சிக்கூறுவா
னன்றிருந்தீர்வடகயிலைத்தென்கயிலையடியேன்மு
னின்றிருந்தீரொன்னுளத்திலிருந்தவருநீர்தாமோ. (௪௩)

நீர்தாங்குபகீரதியுநிலந்தாங்குவிடதரமுங்
கூர்தாங்குமிளம்பிறையுங்குடிதாங்கிமுடிதாங்கி
வார்தாங்குமுலைத்தரளவடந்தாங்குமுமையொருபாற்
சீர்தாங்குந்தென்கயிலைத்திருப்பதியென்றவப்பேறே. (௪௪)

தவப்பேறுநன்பேறுந்தன்பேறுமில்லாதே
னவப்பேறுய்த்திரியாமலறிந்துதொழப்பெறும்பேறே
சிவப்பேறுமிதழமுதச்சிறப்பேறுமொழிவனிதை
யுவப்பேறுந்திருமேனியுடன்பிரியாப்பெருமானே. (௪௫)

மானிருக்குமிடத்தோடும்வலத்தோடுங்கயிலையினீர்
கூனிருக்குமதிமுடித்துக்குடியிருப்பதறியாம
லூனிருக்கவுயிரிருக்கவுரையிருக்கநாவிருக்க
யானிருக்கவின்றளவுமேத்தாமலிருந்தேனே. (௪௬)

---

* திமில் - வேங்கைமரம்.

† பூதேசன் - சிவன்.

தேனேயுநின்மலர்த்தாடெரிசித்தேனெனதுவினை
தானேவிட்டகன்றதெனத் * தபதிமுகமதுநோக்கி
வானேயுந்திருமலைமேன்மணிக்கோயிலியற்றுகென்று
கானேயுந்தாதகித்தார்க்காவலவனருள்புரிந்தான். (சஎ)

புரிந்தவளப்பொறிமேனிப்புண்டரிகம்பணிந்துபிடித்
துரிந்தவற்குத்திருக்கோயி † லுபானுதிதூபியுட
னிருத்தியருட்கயிலைசத்தியற்பூசைபுரிவித்துத்
திருத்தியபிறுசமனுஞ்செய்தமுதுசெய்திருந்தான். (சஅ)

செய்தவத்தினெறிதருமச்சேர்ந்தியபுராணமது
கைதவத்தாற்கோயிலெங்குமெழுதியாற்கதைமிகுந்து
மெய்தவத்தாற்பொற்றகட்டின்மேய்ந்தெழுதியாய்ந்தமையா
லையனுக்கும்பொற்கோயிலாகவுஞ்செய்தினிதிருந்தான். (சகூ)

இருந்தபுகழ்மனுவேந்தனினத்தொடுமந்திரியோடும்
விரிந்தகடற்றரங்கமெறிவெற்பினடிக்கீழ்வந்து
தெரிந்ததொருகிணறுகண்டுசெம்பொனதற்கிடைகுவித்துப்
புரிந்தபெருங்காவல்செய்துபுனிதனுக்குப்பொன்னென்றான். (ருO)

‡ என்றனையதிருமேனியிராமதேவனுமகிழ்ந்து
நின்றரன்பால்விடைகொண்டுநெடியகடல்கடந்தேகக்
கன்றமைத்தகரத்திருமால்கமலனிமையோர்முனிவர்
குன்றமுற்றபெருமானைக்குரைகழற்றொழுதனரே. (ருக)

தொழுதுவரப்பரமன்னனிருகவசஞ்சூழ்ந்தெதிர்ந்த
பொழுதுகவசமுமகற்றிப்புகுதுமவனையுந்துரந்து
பழுதில்கலிமறுமன்னன்படியாளுந்திகிரியென
வெழுதரியபரிதிகிழக்கெழுந்தபொழுதெனவிருந்தான். (ருஉ)

இருந்தவஞ்செய்மனுவேந்தனியற்றியபொற்கிணற்றருகே
பொருந்தியதாதகியொன்றுபொலிந்ததவம்புரிதவத்தாற்
றிருந்தியபூதமுமதன்கீழ்ச்சிறந்[illegible]ந்தச்செம்பியர்கோ
னருந்தனயற்கரசளித்துப்பரகதி[illegible]யடைந்தானே. (ருங)

அடைந்தவந்நாளிலங்கைவளமாக[illegible]தவொருமறையோன்
கிடந்தசெம்பொற்கிணற்றருகே[illegible]யுதலுங்கிளர்பூத

* தபதி - தச்சன்.
† உபானம் - கோபுரத்த[illegible]ச்சித்திரவரி.
‡ என்று-சூரியன்.

நடந்தவனையெழுப்பியுங்கணுவலந்தீவுக்கரசன்
கடந்துகடனீந்திமுன்னிக்கயிலைமலைக்கெய்தினன். (நிச)

எய்தியரற்காலயமுமியற்றியவர்க்கனேகம்பொன்
பெய்துஇணைற்றிடைமூடிப்பெருங்காவலெலனைநிறுத்தி
வையகத்திற்போந்துகலிவருதலின்முத்தியிலடைந்தா
னையவவன்புதல்வனுக்கீதறைகவெனவறைந்ததுவே. (நிரு)

அதுமொழிதன்செவிப்படலுமருமறையோன்றனியெழுந்து
முதுகடலுங்கடந்தந்தமுடிமன்னன்றனிக்குமரன்
விதிமுறைசெய்குளக்கோட்டனுடன்மறையோன்விளம்பவவன்
பதியரசுதன்மகற்குப்பாலித்திப்பால்வந்தான். (நிசு)

வந்துகடல்கடந்துகரைமருங்கணுகித்தென்கயிலை
யிந்துமுடிப்பெருமானைச்சந்நிதிசெய்தெதிர்தொழுது
புந்திநெகிழ்ந்துருகிமயிர்ப்புறம்பொடிப்பவிருவிழியுஞ்
சிந்துபுனல்பெரிதொழுகச்சிவாயநமவெனப்பணிந்தான். (நிஎ)

தானேதன்றனக்கிணையாந்தனிமுதல்வியருகிருப்பத்
தேனேயுமலர்வனஞ்சூழ்தென்கயிலைமீதிருக்கு
மானேயுங்கரத்தானேவல்வினையின்குறும்பறுப்ப
யானேயமுடனிறைஞ்சவெத்தவஞ்செய்தேனென்றான். (நிஅ)

தேனிலவும்பொன்னிதழிச்செழுமலரும்பகீரதியுங்
கூனிலவுமுடித்தசடைக்கோணமலைப்பெருமான்றன்
வானுலகுமண்ணுலகும்வந்துதொழத்திருப்பணிக
டானுலகிற்செயநினைந்துதமனியப்பொற்கிணறுற்றான். (நிகூ)

உற்றவனைப்பெரும்பூதமெதிரிறைஞ்சியுனைப்பயந்த
கொற்றவன்றன்செப்பேடுங்குறியுமிதுவெனக்கொடுப்ப
வுற்றதனமெடுத்ததனுக்கிருமடங்கேயொளிவிடும்பொன்
முற்றுதிருப்பணிக்களித்தான்றன்கரத்தான்முடிவேந்தன். (சுo)

வேந்தனுமந்திரியும்போய்விமலர்திருப்பணிக்காக
வாய்ந்தமலைமுறித்தசிலைவரும்படிக்குவழிவேண்டிக்
காய்ந்தவரக்கன்றலைநாளுடைத்தகடல்வழியடைத்துப்
போந்தபடிகட்டியதன்புறமேறித்தெரிசித்தான். (சுக)

தெரிசித்தான்கலியுகநாட்சென்றமறைவானவனொன்
றுருசித்தம்பாசுபதமறையோனையுரவோனும்

*பரசித்தான்வணங்கிப்பகர்கிரணசமத்தின்வழி
பரசித்தம்பூண்டவனைப்பூசனைசெய்துய்மினென்றான். (௬௨)

என்றுமகாமண்டபமுமெழின்முதன்மைமண்டபமுங்
குன்றனையகோபுரமுங்கோவில்பலசாலைகளு
நன்றிபெறவமைத்தருளிநாயகிக்குப்பொற்கோயில்
வென்றிபெறச்சமைக்கவேண்டுமெனவுரைசெய்தான். (௬௩)

உரைசெய்தபடிதவறாதுயர்ந்தபடிக்குலத்தவர்பொன்
வரைசெய்ததெனக்கோயின்மண்டபஞ்சூழ்மதில்செய்தார்
† பிறைசெய்தவமுதமொழிப்பிடியன்னமென்னடையைத்
தரைசெய்தபுண்ணியம்போற்றாபித்தான்மனுவேந்தன். (௬௪)

தன்றுண்மைக்குவமையிலாத்தனிவேந்தன்வடகயிலை
மின்றேங்குருவடெனத்தென்கயிலைக்குவேண்டுமெனப்
பொன்றுருஞ்சிகரமும்பொற்கோபுரமும்பொருந்தியதற்
புன்றாகங்கவித்ததெனமவுலிகளும்பலசெய்தான். (௬௫)

செய்தபடிக்காயிரம்பொன்றென்கயிலைமீதிருக்கு
மையர்தமக்களித்தருளியலங்காரசிலங்கொண்டு
வையகமெண்ணயில்சூழமணிக்கோயிலியற்றியதிற்
றுய்யதிருமாயனையுந்தாபித்தான்றொடைமார்பன். (௬௬)

தொடைபுனைவேதியர்முதலாந்தொல்லோர்க்குமெல்லோர்க்கும்
படியில்வினைப்பயந்தீர்க்கும்படிபாவநாசமென்னுந்
தடமதுகண்டதற்கருகேதனிமுதல்வனீராடு
மிடமருவுமண்டபமுமியற்றுவித்தான்சேய்தருமன். (௬௭)

தரும்நெறிதவறாததனிவேந்தன்சிவபூசைக்
கருமநெறிபுரிவதற்குக்கலைமறையோர்தவமுனிவர்
வருபவர்வந்தாறுதற்குந்தனக்கொருமாளிகையாகப்
பெருமதியந்தவழ்மாடகூடங்கள்பெரிதமைத்தான். (௬௮)

அமையாததரங்கமெழுந்தார்ப்பரிக்குங்குணகடலுஞ்
சமையாவக்குடகடலுஞ்சந்திப்பப்பந்தித்துச்
சிமையாதிமலைநிறுத்துஞ்செய்கையெனமதினிறுத்தி
யெமையாளுங்கயிலாயற்கெவ்வகையுஞ்செய்தமைத்தான். (௬௯)

‡ அமையனையதிருத்தோளினணங்குபிடியன்னநடை
யுமையையுமைநாயகனையொளிபெறவேதொழுதேத்திச்

* பரசல் - துதித்தல்.
† பிறை - பங்கு. அமை - மூங்கில்.

சமையமுதலாகியமெய்ச்சைவநெறிதழைத்தோங்கச்
சிமையமுடித்தென்கயிலைத்திருமலைக்கீழினிதிருந்தான். (எ0)

இனிதிருக்குமந்நாளிலெந்நாளுந்திருப்பணிக
ணனிதிருத்தித்தென்கயிலைநன்னகருந்திருத்துவித்துக்
கனிதிருத்துமலர்க்காவுங்கடிதிருத்துமணிமறுகும்
பனிதிருத்தும்புனல்வாவிபஃறடமும்பயில்வித்தான். (எக)

வித்தகஞ்சேர்மலர்ச்சோலைமென்பீலிபசுங்கலப
மத்தர்திருக்கோபுரந்தன்னணித்தலையின்மணிச்சூடு
வைத்தகயிலையின்வாயில்வாய்ப்புரிசைவயிறிரண்டு
பைத்தலையகடல்சிறகாய்ப்பயிலுமலைமயில்போலும். (எஉ)

மயிலினங்கணடமாடமதுகரங்கள்சுருதிசெய்யக்
குயிலினங்கள்குழலிசைப்பக்குளிர்கவரிகமுகசைப்பப்
பயிலிதழிபொன்னளிக்கப்பசுஞ்சோலைதலைதுளக்கக்
கயிலைமலையிருந்தவளங்கவிதையுளாக்கடங்குமதோ. (எங)

உளைத்தவளக்கோடுலவவோதுகளுத்தாரமுற
நிளைத்துலவுகாலசைப்பநிறையேரிதனியுலவ
வளைக்கலைவெண்மதியுடையாரனுதினமுமிருப்பமறை
* யிளைத்தபெருங்கோணைநகரிடபமெனவுளைசெயலாம். (எச)

உளைவிரிந்தமறையோர்களோமவனன்முன்னிருத்தி
நிளைவிரிந்தகனன்மீதுநிறைத்தபலவாகுதியால்
விளைவிரிந்தமலர்க்காவின்மீதெழுந்தபுகைப்படலங்
களைவிரிந்தகடலருந்தக்கனம்விரிந்ததெனலாமே. (எரு)

ஆமேயவிலைதேடியண்ணுந்துபலகூடிக்
காமேவுமலர்ப்புன்னைக்கடிநிழல்சூழ்ந்நேரம்
பூமேவுமதிலொருவன்புனிதனுளனதனுலுங்
கோமேதகமாலுங்குருந்துமடவாருமொக்கும். (எசு)

குடத்தலையமலர்க்கோங்கின்குளிர்தாதையறுதாளா
லுடைத்தவளியினஞ்சோலையூடெழுந்துதிரிவதெல்லாங்
கடைத்தலையோர்தமைநீக்கிக்காவலர்கண்ணலர்ந்தவர்பால்
விடுத்தபலதுதொழும்விளைவேனவுமுளைசெயலாம். (எஎ)

செய்யவிதழ்ச்செங்குவளைச்சிறுதாளின்மீதுயர்ந்த
துய்யமலர்க்காயாவிற்சூழ் † தேரன்றியலர்சொரிதேன்

* இளைத்தல் - ஒலித்தல். † தோன்றி - காந்தள்.

பையரவின்றுயின்மாயன்பங்கயச்செங்கரமதனு
னெய்பொழியுந்தழல்வேள்விநிகர்க்குமலர்க்காவினமே. (எஅ)

இனமின்முன்செலும்பறவையிருங்காணில்விழுந்தரற்றத்
தனதனவென்றளிபாடத்தமரமறுத்தலைத்தபடி
கனகமுடிமனுவேந்தன்கடற்சேனைப்பலகுலமும்
வினவுமெதிர்மொழிபோலவிரவுமிளம்பூங்காவே. (எகூ)

பூங்கதலிக்கரும்பினஞ்சூழ்பொன்மாடத்திழையவெயி
ருங்கியபின்சிறகோதித்தலைமடங்கும்பெடையன்னம்
பாங்கிருந்தவெகினமணம்பாவித்ததென்றெண்ணி
மாங்கனியின்சாறெறிந்துமஞ்சள்விளையாடுமந்தி. (அ0)

மந்திரியின்முகங்கோடாமலர்ந்தமுகவரசனிடைப்
புந்திமகிழ்கவிபாடிப்புகும்புலவனெனலாமால்
முந்தமலர்முகந்தோற்றமுதுபலவிற்செல்லாது
கந்தமலர்முகங்காட்டுங்கமுகிலளிசெல்வனவே. (அக)

வேந்தருங்காவலிடவேண்டேமியாங்காமனென்றுந்
தேய்ந்தவிளம்பிறைமுடித்ததிருவடிக்காமலரென்றும்
வாய்ந்தகுயிற்சின்னமுந்தன்மலர்ப்படையும்வைத்ததனுட்
போர்க்குப்பெருஞ்சோலையெங்கும்புகுந்துமதன்காப்பிடுவன். (அஉ)

வேறு.

காப்பிட்டலர்வாயளியினங்கள்களிகொண்டசோகின்மலர்பாய
[illegible]பட்டன்னமேற்பாய்ந்துவெடிக்கும்பலவின்சுளைத்தேனும்
பூட்பிட்டொழுகும்பசுந்தேனும்பொழிந்துபதைக்கும்வானரங்கள்
கூப்பிட்டயலார்க்குதைப்பவர்போற்குயிலுமயிலுங்குரல்காட்டும். ()

காட்டுங்கதலிக்கொழுங்கனியுங்கமுகின்கனியுமாங்கனியுங்
கோட்டின்பலவின்சுளைக்கனியுங்கூட்டிக்கறியின்கொடிவீழ்ந்து
நாட்டின்கரும்பின்பணையொடித்துநறுநீர்வாவிதொறுஞ்சிதறித்
தோட்டின்கமலமலர்ப்பொகுட்டுத்துயில்வண்டெழுப்புந்திருநாடு. ()

நாடுங்குழக்கன்றினைநினைந்துநடந்துகுறுந்தாட்கருமேதி
யோடுங்கழியிற்சுரந்துமுலையொழுகும்பாலிற்புதுவெள்ள
மேடுங்குவளைக்குழியினமும்விரவிப்பாயக்கயல்குதிகொண்
டாடுமுயரங்கண்டுவெருண்டகலுமுகிலும்வானெல்லாம். (அரு)

வானுமிளிருமுடுவினமும்மதியும்போலப்புதியதளிர்க்
கானுமலரும்பளிக்கறையுங்கலந்துவசந்தப்பசுந்தென்ற

றேனுந்தோடேம்புளினமுறச்சிதறுஞ்செவ்வித்திரிகூடந்
தானுமருச்சித்தடியிறைஞ்சுந்தகைமைத்தென்னவிளங்கியதே. (அசு)

விளங்குமிளங்காவனஞ்சூழ்ந்துவெயிலின்கிரணம்படாதபுவி [ன்
தளங்கும்படிவெண்ணிலவெறிக்குந்தனிவெண்குடையானமனுவேந்த
களங்கமடியார்க்கிலையாக்குங்கயிலைப்பெருமானடிபணிந்து
வளங்கொளிலிங்கந்தமக்கொன்றுவைத்துப்பணியுமந்நாளில். (அஎ)

அந்நாணன்றுளெந்நாளுமாகப்புவனிவளஞ்சிறப்பப்
பொன்னுரிதழிக்கயிலாயர்பூசைக்குதவும்பொருட்டாக
விந்நாடனைத்தும்விளைவதற்குக்குளமொன்றியற்றியிருப்பமென
மன்னுவதுநன்றெனப்பலருமவழுத்தமன்னன்கடிதெழுந்தான். (அஅ)

எழுந்தானதற்காமிடநோக்கியெறிநீர்நதிபோய்மலைதாக்குங்
கொழுந்தாமனேகங்காநவழிகோலிப்படிக்கற்கரைதிருத்தி
விழுந்தாரையினீர்மதகினுக்குவிடுத்தநல்பிடித்தலுறப்பியற்றிச் [ன்.
செழுந்தாரையினீர்க்குளங்கயிலைச்சிவனூர்க்கெனக்கல்லெழுதிவைத்தா

எழுதுமுழுவைக்கொடிபடருமிமையம்பொதியநடுவிட்ட
முழுதுந்தனதுகுடைநிழற்றுமுதல்வன்கயிலைப்பதிமீண்டு
பொழுதங்கவமேபோகாமற்புனிதன்கயிலைப்பெருமானைத்
தொழுதும்புகழ்ந்தும்புராணகதைசொற்றுங்கற்றுமினிதிருந்தான். ()

வேறு.

திருந்துமவ னிவ்வண்ண நெடுநாள் வாழ்ந்து திருப்புதல்வற் கர சளித்துச் சிவன்பொற் பாதந், தருந்துணையே துணையெனச்சென் றடைந்தா னன்ன வன்மரபி லொருசிறுப னறிவி லாமை, பொருந்தி யனு ராசபுரி யென்னும் பேரூர் புகுந்துகயி லையைமறந்து புவனி யாண்டு, மருந்தனைய சிவசமயந் தணந்து புத்த மார்க்கமெனும் பெரும் பாவ வழியிற் புக்கான். (கூக)

கானிருந்த தாதுதிர்த்தார் கமழு மார்பன் கயவாகு மென்னுமந்தக் கழற்கால் வேந்தன், றனிருந்த நெறியடைவே யிலங்கை யெங்குந் தனிக்குடைக்கீழ்ப் புரக்குமந்தத் தகைமை நோக்கி, வானிருந்து வரு ந்தவள வரசு தன்னை மணியிருந்த பொற்கரத்தால் வாங்கி வைத்துத், தேனிருந்த சிறீசங்க போதி யென்னுந் திருநாமந் தரித்தரசு செலுத் துங் காலம். (கூஉ)

காலனைமுன் னுதைத்தகறைக் கண்டர் கோயிற் கயிலைமலைக் கெதிர் மலையிற் * கணமுண் டாக்கிச், சிலமிகும் புத்தரைச்சித் திரித்து வாழ்

* கணம் - கூட்டம்.

நாட் சிவனடியார் பூவெடுத்துச் செல்லுங் காலைப், பாலருந்தச் † சிவகர்கள் பலருங் கூடிப் பறிப்பதனும் ‡ பாசுபதர் பலரும் போந்து, வேலைதனி லவனைவிழ விட்டா ரந்த வெம்மொழியை வேந்தனுக்கு விளம்பி னாரே. (௬௩)

விளம்புமொழி யினையுணர்ந்து வேந்தன் பொங்கி விழியிரண்டுங் கனல்பொழிய வெகுண்டு வேணிக், களங்கமறுக் காடானி கயிலை யெங்கோன் கணமாக வகுப்பனெனக் கருத்தி லுன்னித், துளங்கலிலாச் சதுரங்கப் படையினோடுந் தொடருதலுங் கயிலைமலைச் சோறு நோக்கி, யுளங்கனிவில் லாவரசன் கல்லாலிச் சோறு யொளியிருளத் திருவுளத்தி லெண்ணி நின்றான். (௬௪)

நின்றகலாக் கண்ணிருள திருப வெஞ்ச நினைவுமறந் தவசமுறு நேரங் கோனைக், குன்றிறையோ னொருமறையோன் போன்முன் மெய்திக் கொடுத்திடவத் திருநீற்றைக் கோமான் வாங்கித், தன்றலைய லெறிபோந்து சிவசி வாய சங்கரவென் றுரைத்துமுறந் தறிந்த காலை, யன்றருகு நின்றபுத்தர் பலரு மாவீத் துறிவழிய வொருவிழிகண் டுனைந்தம்மா. (௬௫)

அம்பரத்திற் கதிரிரவி யுதிக்குங் காலை யலர்மதிய மழுங்குதல்போ லரிய நாட்டஞ், செம்பதும முகந்தோன்று விளங்க வொன்று செறியிருளாய் நின்றதுதெய் வீக மென்று, கும்பிடுதல் செய்தரனார் திருவெண்ணீற்றைக் குழைத்திடுதல் செய்தெவருந் தொண்டி னொன்றான், பம்புபுனல் வளநாட்டிற் பாய முன்னோட் பார்த்திபன்செய் குளநோக்கிப் பரவா நின்றான். (௬௬)

நோக்கியதன் கண்டமைந்த கார ணத்தா னுவல்பெருங்கல் லடைமையென்ற தற்குணர்ட்டி, யாக்கினனித் திருக்குளமு நகரு நாடு மரனார்க்குக் குளக்கோட்ட னவன்முன் செய்த, பாக்கியநன் றெனமன்ன னுவந்தா னந்தப் பாசுபதர் பவுத்தரது குற்ற மெல்லா, நீக்கியொரு திரிகோணப் பெருமான் மேனி நிருமலத்தி னொருமையெனு நெறியிற் சூழ்ந்தார். (௬௭)

சூழ்ந்திமைக் கயிலையினுற் புறமும் வேலை சுழித்தெறிந்த இவலை மலைச் சுற்று முற்றும், வீழ்ந்தவர்தம் முடலெடுத்துக் கடவுட் டேர்ந்தம் விரவுதலு மன்னிலைமை வினவி வேந்த, னாழ்ந்தபெருந் துயராகி யுருகி மெய்சோர்ந் தரகரவென் றழுதரற்றி யார்வ மோடுந், தாழ்ந்த

† சிவகர் - பௌத்தர்.

‡ பாசுபதர் - பாசுபதசமையத்தவர்கள். இது உட்சமய மாறினொன்று.

சடை முடித்தவர்சந் நிதிபோய் வீழ்ந்தான் சங்கரர்மற் றிருகண்ணுந் தந்தா ரங்கண். (௯௮)

கண்ணிரண்டு மொருபரம ஞானக் கண்ணுங் கயவாகு பெற்றுபய கரங்கள் கூப்பி, யெண்ணிரண்டு கலைமேலு மிரண்டா யொன்று யிருந் தபரா பரப்பொருளை யிறைஞ்சி யேத்தி, யண்ணலருச் சனைக்கென்றே யயருங் காலத் தலைகடலைக் கடந்திருவ ரந்த ணாளர், நண்ணினரொன் றனரவனைக் கொணர்மி னென்று நூதனருச் சனைக்கிவரோ நல்லோ ரென்றான். (௯௯)

என்றுமரா னருச்சனைக்கு மிக்கோ ரென்று விப்பதியின் முதன்மை யிருவோர்க்கு மீந்து, வென்றிதரு நமதுகுலக் குரவோ ராகி விளங்கு மெனக் குருவரிசை மிகவு நல்கிக், கன்றுலவு வெருகுநதி தருப்பை யாறுங் கரம்பகநீர்க் கடலளவுங் கணித்த வெல்லை, துன்றுதிசை நான்குமரன் றனக்கே யென்னச் சொல்லுமவன் கல்லெழுதித் துலங்க வைத்தான். (௧௦௦)

வைத்தொருவர் புதைத்தநிதி முழுதுங் கோண மலையரற்கே யுரிமையித்த வளநாட் டுள்ள, கத்துகடல் வளமுமலை வளமு மற்றைக் கனைவளமுங் கழிவளங்கான் வளமு மெல்லாம், பத்தினிலெட் டுங் கயிலைப் பரற்கு மிக்க பங்கிரண்டு முங்களுக்கே பகுதி யாமென், றெத் திசையும் புக*ழனுரா வேந்தன் செப்பே டெழுதியவர் கைக்கொடு த்தா னின்ப மாக. (௧௦௧)

ஆகமநூ னெறிமுறையே யுதய முச்சி யத்தமய மாமபர மந்த யாம, மோகைதரு நாற்குலமு மினிமை கூர வுவமையிலா வரன்றனைக்கு மூவகை சேர, மாகவளப் புழைப்பணைக்கை முக்க ணாலவாய் மத களிற்றை முன்பூசை வழுத்தி யந்த, நாகநதி மதிமுடித்த கயிலை நா தர் நயந்தசிவார்ச் சனைநியதி நடத்து வித்தான். (௧௦௨)

நடனவிதந் தருபாத நளினத் தாற்கு நமனையுதைத் தெமையாள நயந்த நீலக், கொடியிடது புறமாகப் படரு மேனிக் கோணமலை நாத ருக்குங் கொண்டல் போலுங், கடகலுழிக் கரிமுகன்முன் போகக் கா ளக் கடலொலிப்பப் பங்குனியுத் திரநாட் கன்னி, மடமகளிர் கவரி யிட மறையோர் வாழ்த்த வயங்குதிரு நாளுலகம் வாழச் செய்தான்.()

செய்தோறு நிரம்புமுருந் தங் குரம்பு தோறுந் திரண்டிருளைத் துரா த்துதிரி கோண நாதர், பைதோறு மணிக்கிரணம் பரந்து பாயும் பாந் தன்முடித் திருமேனிப் படிவ நோக்கி, மெய்தோறுங் கண்படைத் தாற்போல நின்று விழிதோறும் புனறுளிக்க விழுந்து போற்றிக்,

* அனுரா - அனுராசபுரம்.

கைதோறு மேந்திமல ரீசன் செம்பொற் கழறோறுஞ் சொரிந்துநின் றான் கருணை வேந்தன். (௧௦௪)

தன்னிகரி லாததிரு மலையி னூடே தகையதொரு பெருமுழக்கந் தமரித் தோங்க, மன்னனிது பெருமுழக்க மென்கொ லென்று மறைமுதன்மை யிருவரையும் வதனநோக்க, வின்னதிருத் தெய்வமலைக்குக் கிழே யெம்மா னினியதிருக் கங்கைநதி யிருப்பச் செய்தா, னந்நதியிற் றீர்த்தஞ்சேர்ந் தயன்மால் வானோ ரருமுனிவர் துதிப்பதென்று ரைத் தனார். (௧௦௫)

அந்தமொழி கேட்டரச னருணை காலந் தனர்கமல மெனமுகமலர் பொழுக நோக்கிச், சுந்தரமா மறைமுதல்வீ ரிங்கே கங்கை தோன்றி யதொல் கதையெமக்குச் சொல்வீ ரென்னக், கந்தவட கயிலையிற்ற னெம்பிரானைக் கவுரியவிர் சடைக்கரத்தால் வகிரக் கங்கை, யிந்தை வெரு விடக்கடவு ளிரங்கித் தன்கைச் சிறுநகத்தால் வாங்கியிங்கே திகழ வைத்தான். (௧௦௬)

வைத்தகங்கை யரன்பதமீ தோங்கி யேந்து மலையருவி பரவிமா வலியுஞ் சூழ்ந்து, முத்தமெறி காவிரியின் முகமு மாய முகியகட னடு வினிது முழங்குங் காலை, யுத்தரவான் கயிலைமுடி யுடன்வந் தீச னுலவு மித னிடைத்திருத்தா ளூன்றி நின்றான், சுந்தமிது கதைதென்பாற் கயிலை யென்றே சொல்வரொன் றார்சைவச் சுருதி வல்லோர். (௧௦௭)

சுருதிமனு நெறிதவறாப் பரிதி வேந்தன் றொல்குலத்து முழுமுதல்வீர் தொன்றாள் வந்த, திருநதியிற் புனன்முகந்து பெருமான் றிங்கட் சென்னியுற வபிடேகஞ் செய்வீ ரென்ன, வருமறையோர் திருமலையிற் பிலத்து ளேகி யந்நதித் தீர்த்தமெடுத் தன்பா லெய்தி, மதிமுடியி லபிடேகஞ் செய்யக் கண்ட மன்னவர்கோ னுளமகிழ்ச்சி மதிக்கற் பாற்றோ. (௧௦௮)

பாற்கடலு ளிருந்ததிரு மாலோ வல்லன் பரிமளத்தேன் சொரி பதுமத் தயனோ வல்ல, னூற்கவர்வெண் கோட்டயிரா வதத்தோ னல்ல னராதிபனோ வல்லனெனும் பெருமை நண்ணிக், காற்குலவுங் கமலத்தன் சென்னிக் கீசன் கவித்தமுடி யெனப்பெரிதுங் கருதிப் போற்றி, மேற்பிறப்புக் கொருமருந்தாய்ப் புனிதன் றீர்த்த மிகவேந்தி யகத்துளர விந்தஞ் சேர்ந்தான். (௧௦௯)

சேர்ந்தநதித் துளிமுடிமேற் சேர்த்து மீண்டுஞ் சிவனடியை வணங்கியுளந் தியானித் தன்று, நீர்த்தமருந் தெழுமுகிலுங் கனகம் பெய்யு நிலைமையெனத் தசதான நிதமுஞ் செய்து, பார்த்ததிரு வருட்பார்வை யெம்பி ரானைப் பணிந்துவிடை கொண்டனுறைப் பதியுட் புக்

கான், பூத்தரணி நிருபரெல்லா மதனைக் கேட்டுப் பூசனைவெவ் வேறு பயம் புரிந்து வாழ்ந்தார். (௧௧௰)

வேறு.

ஆக்கலாமழிக்கலாமண்டம்யாவையுங்
காக்கலாங்கடையுகங்கடந்துநிற்கலா
மேக்குலாந்தென்கயிலாயமேவினோர்
பூக்குலாந்திருவடிபுகழ்ந்துவந்தித்தால். (௧௧௧)

வரந்தருதென்கயிலாயமன்னிய
நிரந்தரன்றாளிணைநினைந்துவாழ்த்துவார்
புரந்தரனிமையவர்போற்றநீள்விணை
துரந்தரனாவதுஞ்சொல்லவேண்டுமோ. (௧௧௨)

வேண்டியமுத்தியின்விருப்பமீக்கொள
வீண்டொருபுராணமதென்றிசைத்தனன்
காண்டகுமுணர்விலிக்கவிதையேனுமின்
றாண்டகைக்கன்பினாலருத்தியாவதே. (௧௧௩)

தேனெனவமுதெனச்சிறக்குங்கல்வியு
மானநாற்கவிதையுமறனுமோங்குக
ஞானமுஞ்சுருதியுநலனுநீதியுந்
தானமுந்தருமமுந்தழைத்துண்டாகவே. (௧௧௪)

ஆகமநெறிகளுமந்தணாளரும்
யோகமும்வளருகவுலகநீடுக
மேகமுஞ்சைவமும்மேவியோங்குக
போகமுந்திருவொடுபொலிந்துவாழ்கவே. (௧௧௫)

வாழிதென்கயிலையம்பொருப்பும்வையமும்
வாழியவன்பர்தங்கணமும்வானமும்
வாழியஞ்செழுத்தொடுவளமுநீதியும்
வாழியதொண்டர்சீர்வாழிவாழியே. (௧௧௬)

திருநகரச்சருக்கம் முற்றிற்று.

---

ஆ௳ திருவிருத்தம் - ௯௱௨.

---

தக்ஷிணகைலாசபுராணம்
முற்றிற்று.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௩ | க௪ | உ | ரளவேயாக்கிச் | ரளவாய்ச்செய்தான் |
| ௬ | க௮ | ௩ | டொருமோங் | டொறுமோங் |
| ௭ | உ௮ | ௩ | கனும் | கணும் |
| ,, | உ௯ | ௪ | விசைவி | வளைவி |
| ,, | ,, | ,, | ,, | ,, |
| ௮ | ௩௫ | க | திளைச் | திசைச் |
| க0 | க௭ | க | சாரணி | தாரணி |
| கக | உக | ௩ | சொல்லுங் | செல்லுங் |
| க௪ | ௪௩ | க | மெத்தவ | மெய்த்தவ |
| க௫ | ௫௩ | ௪ | மூவாய் | மூவிவாய் |
| ,, | ௫௮ | க | றமணியமேரு | றவளவான்கயிலை |
| க௯ | ௮௫ | க | கிரிக்குழு | கிரிகுழு |
| ,, | ,, | ௩ | தாரும் | தாருப் |
| உக | ௫ | ௩ | முத்தமுத் | முத்தமைத் |
| ,, | ௮ | க | மழுது | மமுது |
| உ௨ | கஉ | ௩ | கோணே | கோனை |
| உ௪ | ௩0 | க | பிலிக்க | பிலைக்க |
| உ௬ | ௭ | ௪ | மூழகி | மூழ்கி |
| உ௯ | ௩0 | உ | டேலு | மேலு |
| ௩௯ | உஉ | ௫ | புக்கா | புக்கான் |
| ௪0 | உ௯ | ௪ | திசை | திளை |
| ௪க | ௪க | க | புசழுழு | புகழு |
| ௪௩. | க0 | ௩ | வற்கும் | வர்க்கும் |
| ௪௮ | ௪௪ | ௪ | வற்கெலாம் | வர்க்கெலாம் |
| ௫உ | ௮௩ | உ | செயலுமின் | செயலுறுமின் |
| ௫௩ | ௮௯ | ௪ | திணருறு | திருணறு |
| ௫௮ | க00 | உ | சிறந்தயோர் | சிறந்தாயோர் |
| ௫௫ | க0௬ | ௩ | பதிறி | பதறி |
| ௬க | க௫௫ | ௩ | வாமுக்கை | வாழ்க்கை |
| ௬௫ | க௮௬ | உ | தேசவிலிங் | தேசலிங் |
| ,, | க௮௮ | உ | வடிட்புலை | வடிபுலை |
| ௬௭ | ௩ | ௪ | கறிந்த | கரிந்த |
| ௬௯ | க௭ | ௩ | பணைமெனும் | பாணமெனும் |
| ,, | ,, | ௪ | பதல | பலதல |
| ,, | க௯ | உ | மெழுதிய | மெழுந்திய |
| ௭0 | உ௬ | ௪ | முரசே | முறைசே |
| ௭க | ௩௫ | ௩ | விக்கிப் | விக்குப் |
| ௭உ | ௩௯ | உ | சூழல் | சூழச் |
| ,, | ௪௩ | ௩ | கயிலைத்தென் | கயிலைதென் |

இந்நூல் அச்சிடுதற்குத் திரவியோபகாரஞ்செய்த

கண்ணியசீலர்களின் நாமாதிகள்.

---

| | Occupation. | Rs. | No. |
|---|---|---|---|
| S. Namasivaya Mudaliar. | | 10 | 0 |
| S. Mayloe Pillay Mudaliyar. | Shiraff C. M. B. | 10 | 0 |
| P. Coomarasawmy. | Proctor S. C. | 10 | 0 |
| P. Arunachalam. | Piscal and act Reg. General. | 10 | 0 |
| C. Kadiruvaloo Pillai. | Shiraff New O. B. C. | 5 | 0 |
| W. Sangara Pillai. | Broker. | 5 | 0 |
| T. Supperamaniam. | Broker. | 5 | 0 |
| C. Tambyah. | Shiraff. N. B. of I. | 5 | 0 |
| N. Aromogam. | Broker. | 5 | 0 |
| K. K. Sinnyah. | Clerk, G. P. O. | 2 | 50 |
| A. Dharmalingam Pillai. | P. Sergt Detective Branch. | 2 | 50 |
| S. R. M. | Broker. | 2 | 0 |
| Muttu Tamby. | Do. | 2 | 0 |
| V. Ponnusawmy. | Contractor. | 2 | 0 |
| R. Suppiah Naido. | P. Constable. | 2 | 0 |
| A. Cannappa Pillai. | Clerk E. Dept. | 2 | 0 |
| S. Parker. | Interpreter S. C. | 2 | 0 |
| A. Tambiah. | Broker. | 1 | |

இவர்கள் நன்றியென்றும் நினைக்கத்தக்கது.

இங்ஙனம்

கா. சி.

# கையொப்பக்காரரின் பெயர்கள்.

## திரிகோணமலை.

| பெயர் | பிரதியின்தொகை. |
|---|---|
| கா. பஞ்சாட்சரக் குருக்கள் | க |
| கா. சபாரத்தினக் குருக்கள் | க |
| சு. முத்துக் குருக்கள் | க |
| க. கதிர்காமக் குருக்கள் | க |
| இ. முத்துச்சாமி ஐயர் | க |
| சு. சோமசுந்தர ஐயர் | க |
| இ. பொன்னுச்சாமி ஐயர் | க |
| ப. சோமசுந்தர ஐயர் | க |
| மு. கனகசபாபதி ஐயர் | க |
| வெ. செ. கனகசபை முதலியார் | க |
| த. வேலுப்பிள்ளை வன்னியனார் | க |
| த. முத்துக்குமாரவன்னியனார் | க |
| சு. அம்பலவாணபிள்ளை வன்னியனார் | க |
| அ. தாமோதரபிள்ளைஉடையார் | க |
| சித்திரகவி பெருந்துறை உடையார் | க |
| சி. முத்துக்குமாரு | க |
| சி. கோணமலை | க |
| வெ. செ. அப்பாசாமி | க |
| கோ. கனகசபை | க |
| ந. கதிர்காமத்தம்பி | க |
| க. கனகசபை | க |
| வி. விசுவநாதர் | க |
| ந. அருணசலம் | க |
| வெ. செ. அருணசலம் | க |
| க. வல்லிபுரம்பிள்ளை | க |
| மூ. சதாசிவம்பிள்ளை | க |
| க. அம்பிகைபாகர் | க |
| ச. செகநாதபிள்ளை | க |
| க. வேலுப்பிள்ளை | க |
| சி. கதிர்வேலுப்பிள்ளை | க |
| மு. சுப்பிரமணியம். | க |
| மு. முருகேசபிள்ளை | க |
| சு. தாமோதரம்பிள்ளை | க |
| தா. செல்லப்பா | க |
| மு. சபாபதிப்பிள்ளை | க |
| த. பொன்னையாபிள்ளை | க |
| இ. முத்துக்குமாரபிள்ளை | க |
| வெ. செ. சின்னையாபிள்ளை | க |
| [illegible]. கதிரித்தம்பி | க |
| க. இராமலிங்கம் | க |
| க. நாகரத்தினபிள்ளை | உ |
| ந. தம்பையா | க |
| சு. கோணமலை | க |
| வை. தில்லையம்பலம் | க |
| மு. கதிரேசபிள்ளை | க |
| கா. பரமநாதர் | க |
| மு. வேலுப்பிள்ளை | ரு |
| பொ. வேலுப்பிள்ளை | க |
| வே. நன்னித்தம்பி | க |
| க. தம்பையா | க |
| வ. பொன்னையா | க |
| ம. சோமசேகரம்பிள்ளை | க |
| சு. செல்லையா | க |
| மு. கதிர்காமத்தம்பி | க |
| சு. வேலுப்பிள்ளை | க |
| இ. வைத்திலிங்கம் | க |
| த. செல்லத்துரை | க |
| க. வேலுப்பிள்ளை | க |
| சி. சண்முகம் | க |
| சு. இராமு | க |
| ஆ. வேலுப்பிள்ளை | க |
| ஆ. குமாரவேலு | க |
| ஆ. இளையதம்பி | க |
| சு. சின்னத்தம்பி | க |
| கு. முருகேசு | க |
| சி. விசுவநாதி | க |
| கா. அம்பலவாணபிள்ளை | க |
| த. கனகரத்தினபிள்ளை | க |
| மு. மயில்வாகனம் | க |
| சு. சுப்பிரமணியபிள்ளை | க |
| சு. மு. கனகரத்தினபிள்ளை | க |
| உ. அண்ணமலை | க |

| | பிரதியின்றொகை. |
|---|---|
| பெ. வேலுப்பிள்ளை | க |
| க. கார்த்திகேசு | க |
| வ. கோணமலை | க |
| கு. மூத்ததம்பி | க |
| வ. தம்பிமுத்து | க |
| சி. இராமுப்பிள்ளை | க |
| கா. சுப்பிரமணியம் | க |
| சோ. சின்னத்தம்பி | க |
| சு. பதிரோசப்பிள்ளை | க |
| நா. கணபதிப்பிள்ளை | க |
| இ. சந்திரசேகரம்பிள்ளை | க |
| வி. சங்கரப்பிள்ளை | க |
| சு. தம்பையாபிள்ளை தமிழ்ப்பாசிரியர் | க |
| ந. தம்பிமுத்து | க |
| வெ. செ. ஆறுமுகம் | க |
| A. Coomaroe | 1 |
| C. Murugasoe | 1 |
| S. Morgapper | 1 |
| S. Caderitamby | 1 |
| C. Chinniah | 1 |
| S. Ponniah | 1 |
| C. Poopalla Pillai | 1 |
| N. Chellapah | 1 |
| O. Chellappon | 1 |
| T. Somasuntheram | 1 |
| N. Nallatamby | 1 |
| V. Sanmogam | 1 |
| M. Subramaniam | 1 |
| A. Ponayah | 1 |
| G. Conyah | 1 |
| A. Ramakrisnan | 1 |

Hatton.

| | |
|---|---|
| C. Ponnampalam Conductor | 10 |

| | பிரதியின்றொகை. |
|---|---|
| V. Sinnappah | 3 |
| P. Ayathurapillai | 1 |
| P. Sinnasawmy | 1 |
| வே. இளையதம்பி | க |
| வே. காசிப்பிள்ளை | க |
| சி. ஆறுமுகம் | க |

Deckoya

| | |
|---|---|
| C. Canagasaby Overseer | 2 |
| C. Elayatamby | 2 |

Tallawakelly

| | |
|---|---|
| M. S. Walluppillai Storekeeper | 1 |
| N. Tamba | 2 |

Nannoya

| | |
|---|---|
| S. Nagamuttu Overseer | 1 |

Neweraleiya

| | |
|---|---|
| A. Tilliampalam Head Overseer | 1 |
| Sinnaver | 1 |
| சி. சிவ. அ. சரவணமுத்து | ரு |
| க. வேலுப்பிள்ளை | ரு |
| நா. சிற்றம்பலம் | க |

Kandy.

| | |
|---|---|
| W. Annamalay Chettiar | 2 |
| கோ. கனகசபை | க |

Gampola

| | |
|---|---|
| K. M. Valuppillai | 5 |

மாத்தளை

| | |
|---|---|
| சா. பஞ்சாட்சரஐயர் | க |
| வி. வெற்றிவேலுப்பிள்ளை | க |

# கையொப்பக்காரரின் பெயர்கள்.

## காரைநகர்.

| | பிரதியின்றொகை. | | பிரதியின்றொகை. |
|---|---|---|---|
| கா. வேதக்குட்டிஐயர் | க | வயிந்திலிங்கம் | க |
| சி. இராமலிங்கையர் | க | சி. சரவணமுத்து | க |
| ச. அருணாசலபிள்ளை தமிழ்ச் சிரேட்டாசிரியர் | ரு | ப. சின்னத்தம்பி | க |
| | | க. இலட்சுமணபிள்ளை | க |
| சி. சின்னப்பு (தமிழ்வைத்தியர்) | க | கா. சிதம்பரபிள்ளை | க |
| இ. சபாபதி | க | மு. தில்லையம்பலம் | க |
| க. சுப்பிரமணியன் | க | சி. கந்தப்பிள்ளை | க |
| த. நாகமுத்து | க | கோ. வேலாயுதன் | க |
| இ. வியாக்கிரபாதர் | க | அ. சுப்பிரமணியர் | க |
| த. சுப்பிரமணியபிள்ளை | க | கு. பொன்னையா | க |
| வே. காசிநாதர் | க | க. தில்லையம்பலம் | க |
| ஆ. கந்தப்பு | க | வே. அம்பலவாணன் | க |